**திருவேரகம்**
**( சுவாமிமலை )**
**அருள்தரு சுவாமிநாதப்பெருமான்**
**நவரெத்தின மாலை**



ஆசிரியர்
**ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள்**

உரை
**குன்றக்குடி ஆதீனப்புலவர்**
**வித்துவான். க. கதிரேசன் எம். ஏ ; பிஎட்**
**பூவாளூர். 621 712**
**அலைபேசி : 098651 93754**

**தோரண வாயில்**

முருகு என்ற பண்புப்பெயர் இளமை, அழகு, மணம், கடவுள்தன்மை ஆகிய பொருள்தருவது. இப்பொருள் அனைத்தையும் ஒருசேரக் கொண்டு இலங்குகிறவன் முருகன். முருகப்பெருமானை இயற்கைப்பொருள்களில் எல்லாம் கண்டு களித்த நக்கீரர் அவனது வனப்பினை - எல்லையிலா அழகைக்

" கைபுனைந்து இயற்றாக் கவிபெரு வனப்பு "

என்று போற்றுகிறார்.

" என்றும் இளையாய் அழகியாய் "

என்று இயம்புகிறது திருமுருகாற்றுப்படைக்கீழ் உள்ள தனிப்பாடல்.

ஸ்ரீ ஆதி குமரகுருபர அடிகள் , தமது முத்துக்குமார சாமி பிள்ளைத்தமிழில்

" அழகு முதிர்ந்து கனிந்த இளங்கனி "

என்று மனம்இனித்துப் போற்றுகிறார். முருகனாகிய கனிக்குஉரிய அடைகளைத் தனித்தனியே கனிக்குத்தந்து, அழகுக்கனி, முதிர்கனி, கனிந்த கனி, இளங்கனி என்று எண்ணிப்பார்க்கும் நமக்கும் இனிக்கத்தானே செய்கிறது !

சிவபரம்பொருளின் பெயர் நமச்சிவாய. அப்பொருளுக்கு உரிய மந்திரம் சிவாயநம. ஆனால் அந்த ஆண்மகனிடம் தோன்றிய ஆண்மகனான முருகனின் திருப்பெயரும், அவனுக்குரிய மந்திரமும் சரவணபவ என்ற ஒன்றேயாகும். இதனை ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள் ஆகிய அருட்டிரு பாம்பன்சுவாமிகள் தமது திருவலங்கல் திரட்டு முதற்காண்டம் நூலின் 6 ஆம் பதிகமாகிய ஆறெழுத்து உண்மை என்ற பதிகத்தின் மகுடமான சரவணபவ என்பதைத் " தற்பம் ஆவது சரவண பவவே " என்பதன்மூலம் அது ஆறுமுகனுக்குரிய மந்திரம் என்றும்; 7ஆம் பதிகத்தின் மகுடமான ஆறுஅக்கரங்களை ( சரவணபவ ) " அண்ண லார்பெயர் ஆறுஅக் கரங்களே " என்றும் குறிப்பதன்மூலம் சரவணபவ என்பதை முருகனாகவே காணும்போது அது மந்திரம் என்றும், எழுத்தாகக் காணும்போது அது அவனது திருப்பெயர் என்றும் கூறுகிறார். இதனால் சரவணபவ என்பதை அவனாகவே காணின் அதுமந்திரம் என்றும், எழுத்தாகக் காணும்போது அது அவனது திருப்பெயர் என்றும் குறிப்பது புலனாகிறது.

**இன்றைய உலகில் நமசிவாய, சிவாயநம, சரவணபவ என்பவற்றைச் சொல்லநேரும்போது / உச்சரிக்க நேரும்போது இவற்றின் முன்ஒட்டாக ஓம் என்பதை சேர்த்து; ஓம்நமசிவாய, ஓம்சிவாயநம, ஓம்சரவணபவ என்று கூறுகின்றனர். இவற்றின் முன்ஒட்டாக ஓம் சேர்ப்பதுபெரும்பிழை. ஏன் ? இவை ஐந்து, ஆறு என்ற வரையறைக்குட்பட்டவை; பொருளுடையவை. திருமாலுக்குரிய எட்டெழுத்து மந்திரம் " ஓம் நமோ நராயணாய " என்பது. இதில் உள்ள ஓம் நீக்கப்பெற்றால் அது ஏழு எழுத்தாய்விடும். ஆதலின் ஓம் சேர்த்தே எட்டெழுத்து மந்திரத்தை ஓம் நமோ நாராயணாய என்றே ஓதவேண்டும்.**

முன்னாளில் முருகனடியார்கள் திருநீறு தரிக்கும்போது "ஆறுமுகம்" என்ற அவனது திருப்பெயரை ஆறுமுறை கூறித் திருநீறு தரிப்பர் என்கிறார் அருணகிரிநாதர். இதனை அவர்,

" ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம்
ஆறுமுகம் ஆறுமுகம் என்றுபூதி அணிமாதவர் "

என்று " ஆறுமுகம் " என்றுதொடங்கும் பழனித்திருப்புகழில் கூறுகிறார்.

இந்திரன், நான்முகன், திருமால் முதலியோர் நிலைகளைப் பதமுத்தி என்பர். பதமுத்தியாவது பதவிமுத்தி. அப்பதவிகள் அவர் செய்த பசுபுண்ணியப் பலன்கள் ஆகும். இப்புண்ணியப்பலனை அனுபவித்தபின் அவர்கள் மீண்டும் பூமியில் பிறப்பர். அந்நிலையில் அவரவர் செய்த இருவினைப்பயனை சொர்க்கத்திலோ நரகத்திலோ மீண்டும் அனுபவிப்பர். இதன இந்திரன் முதலியோர் மனநிலையில் வைத்து;

" புவனியில் போய்ப்பிற வாமையில் நாள்நாம் போக்குகின் றோம்அவமே இந்தப் பூமி
சிவன்உய்யக் கொள்கின்ற வாறுஎன்று நோக்கி " ( திருவாசகம் திருப்பள்ளி . 19 )

வாதவூரடிகள் கூறுகிறார். இதனால் இவர்கள் மீண்டும் மீண்டும் பிறந்தும் இறந்தும் உழல்பவர்கள் என்று புலப்படுத்துகிறார். எனவேதான் இந்திரன்முதலியோரை ஸ்ரீ குமரகுருபர அடிகள் " செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் " என்பார். இவர்களின் பதவிகளை - நன்னிலைகளை - ஆள்கிறவன் முருகப்பிரான் ஆதலின் பரம்பொருளாகிய முருகனை;

" செத்துப் பிறக்கின்ற தெய்வங்கள் மணவாள
செங்கீரை ஆடியருளே " ( முத்துக்குமார ...... பிள்ளைத். செங்கீரை. 1- 5 மகுடம் )

என்று போற்றுகிறார், ( மணம் ஆளன்= நன்னிலைகளை - பதவிகளை ஆள்கிறவன் )

சத்தி சிவம் ஆகிய இருவரில் சத்தி, உயிர்களைத் தகுதிப்படுத்தும் முறையில் சத்திநிபாதம் அமையும்வரை பிறப்புகளை அருளி மலம்கெடுக்கும் பணியில் ஈடுபடுகிறாள் என்பதும்; உரிய பக்குவத்தில் சிவபரம்பொருள் வீடுபேற்றின்பம் அருள்கிறான் என்பதும் சித்தாந்தமுடிபு. முருகப்பிரான் இவ்விருவரின் இருவேறுபணிகளையும் - உயிர்களைப் பக்குவப்படுத்துதல் வீட்டின்பம் அருளுதல் ஆகிய இரண்டினையும் - தான்ஒருவனே செய்கிறான். இதனை ஸ்ரீ குமரகுருபர அடிகள் முத்துக்குமாசாமி பிள்ளைத்தமிழ் அம்புலிப்பருவத்தில் ;,

" சகலபுவ னத்திலும் உயிர்ப்பயிர் தழைப்பநல் தண்ணளி சுரந்திடுதலால் " ( பா. 1 )

" ஒழியாத புவனத்து உயிர்க்குஉயிர தாய் நிற்பது ஒருதெய்வம் உண்டுஎனஎடுத்து
உரையால் உணர்த்துவதை ஒழியஎவர் எவரெவர்கட்கும் ஊன்கண் உளக்கண்ணதாம்
விழியாக முன்னின்று தண்ணளி சுரந்துஅவர்கள் வேண்டியு வரம்கொடுப்பான்
மெய்கண்ட தெய்வம்இத் தெய்வம்அல் லால்புவியில் வேறில்லை என்று உணர்தியால்

................................................................................................................................

அழியாத வீடும் தரக்கடவன் "                                    ( மு. சா. பி. அம்புலி. 6 )
என்று தெளிவுறக்கூறுகிறார்.

திருவேரகத்துப் பெருமான் சிவபரம்பொருளுக்கு ஓங்காரப்பொருள் உபதேசித்தவன் அதனால் ஒவ்வொரு பாடலின் மகுடமும், இங்கு எழுந்தருளியுள்ளவன் திருப்பெயரான " சுவாமிநாத குருவே " என்று அமைந்தது.

இப்பெருமானைச் சிவபிரான் " ஓங்காரப்பொருள் உனக்குத்தெரியுமா கூறு " என்று கேட்டுச் திருச்செவிதந்தான் முருகன் சுவாமிநாத குருவாக இருந்து சிவபிரானின் வலது திருச்செவில் அதனை உபதேசித்தான். அருணகிரி நாதர் குறிக்கிறார் இதனை;

" சீயனம் போதிஎனச் செவிதர "  ( கந்த அந்தாதி. 19 ) என்றும்;

" தெக்கிண செவிதனிலே போதம் அருளிய குருநாதா "( "எட்டுடன் ஒருதுளை "திருப்புகழ் ) என்றும் குறிப்பிடுகிறார்.( சீயனம்= ஓங்காரப்பொருள். தெக்கிணசெவி= வலதுசெவி )

சுவாமிநாதப்பெருமானிடம் ஓங்காரப்பொருள் கேட்டபோது சிவபிரான் இருந்த நிலையைக் குன்றக்குடி அருள்தரு சண்முகநாதர் பிள்ளைத்தமிழ் ஆகிய மயூரகிரி நாதர் பிள்ளைத்தமிழின் முத்தப்பருவப் பாஎண். 2. பின்வருமாறு ஓவியமாகத்தீட்டி; .

" சரணம்என வந்தவர்க்கு ஆதார மானைஇரு சரணமும் கூப்பி வேழச்
சருமமும் உடுத்தவெம் புலிஅதள் உடுத்தமுன் தானையும் ஒடுக்கிநாகா
பரணமும் தாழாது எடுத்துச்சு ருட்டிஇரு பங்கயக் கைகள்கட்டி
பரிவர்த்த னைக்காலம் ஆம்என்ன மான்மழுப் பக்கத்து இலங்கமூன்றாம்
கிரணவெண் பிறையும் கடுக்கையும் முழங்குபா கீரதியும் வீழ்வதென்னக்
கிளர்தலை குனிந்துஐந்து வாயும்பு தைத்தமா கேசன்திருச்செவிக்குள்
திரணம்என அமுதுஎழும் பிரணவத்து உரைசொன்ன திருவாயின் முத்தம் அருளே "

என்று காட்டுகிறார் அதன் ஆசிரியர் மழவராயனேந்தல் அருட்கவி, அட்டாவதானி சுப்பிரமணிய பாரதியார்.

சிவம் சத்தி ஆகிய இரண்டினையும் உண்மை என்றும் அறிவு / ஞானம் என்றும் குறிப்பர். இவை இரண்டினால் கிடைப்பது பேரின்பம். இதனைக் குறிப்பால் உணர்த்துவது சோமாஸ்கந்த மூர்த்தம். இதில் வலப்பால் சிவமும் இடப்பால் சத்தியும் இவர்கட்கு இடையில் முருகனும் அமைந்திருக்கும். உண்மை அறிவு ஆகிய இரண்டும் ஒருசேர அமைந்த பேரின்ப வடிவானவன் அருள்தரு சுவாமிநாதப் பெருமான் என்பதால் இவனை இந்த நவரத்தினமாலை;

" உண்மை அறிவு ஆனபொருளே " ( பா .3 )

என்று விளிக்கிறது.

மேலும் இப்பெருமான் அண்டத்து உயிர்களில் எல்லாம் இருக்கிறவன் என்பதை;

" நீரினில் தண்மைபோல் உயிரினுக்கு உயிராகி நிற்கின்ற பரிபூரணா "

என்று உவமைகாட்டி விளக்குகிறது.  .

இந்நூலி சொல்பின்வருநிலை அணியாக ;

" ஆறுதலையர் அருள்செய் ஆறுதலையாய் எனக்கு ஆறுதலையார் உனையல்லால் "

என்ற தொடர்அமைந்து ஒளிர்கிறது.

மேலும், தந்தையறிவு மகன்அறிவு என்ற உளவியலை வலியுறுத்தும் வகையில்; தலையில் குருதி கொப்பளிக்க விலால் அடித்த விசயனுக்குப் பாசுபதஅம்பு தந்தவன் உன்தந்தை. அவனைப்போலவே தருமிக்காகப் பரிந்து பேசிய உன்னைத் தக்கவாறு பேசாத நக்கீரனுக்கு அருள்புரிந்தாய். அதுபோல் குற்றங்குறை உள்ள என்மேலும் நீ கருணை காட்ட வேண்டும் என்றுவேண்டுகிறார்.

" பண்டு உதிரமது சிந்த வில்லால் அடித்திட்ட பார்த்தனைக் கோபியாமல்
பாசுபதம் அருள்செய்த சிவகுமரா ! நின்பயந்தவர் செய்பாங்குபோலும்
திண்டுமுண்டு உரைசெய்த நக்கீர னைக்காத்த செய்கைபோல் உன்கிருபையால்
சிறியேன்மீ தேபூர்ண கருணாக டாட்சம்அது செய்யவேணும் இதுசமயமே."

என்று வேண்டுகிறார்.

இவ்வகையில் வைரம், முத்து, மரகதம், மாணிக்கம் நீலம் புட்பராகம், வைடூரியம், கோமேதகம், பவளம் என்ற நவமணிகளால் ஆன இந்த நவரத்னமாலை , ஒளிரும் பல்வேறு கருத்துகளைக் கொண்டு " உருவுகண்டு எள்ளாமை வேண்டும் " என்பதற்கேற்பச் " சிறிய பெருந்தகையாய் " ஓதுகிறவர் உள்ளத்தை உருக்கும் கனிவுடன் சுடர்வீசுகிறது, இதனை உளம் உருகி ஓதி , அவன் அருள்பெற்றவர் மிகப்பலர்.

இத்தகு காரணங்களால் இந்நூலினைத் திருப்பனந்தாள் காசித்திருமடத்தின் அதிபர் வணக்கத்திற்கும் போற்றுதலுக்கும் வழிபாட்டிற்கும் உரிய கயிலைமாமுனிவர் திருவளர்திரு காசிவாசி முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் இம்மாலையை அனைவரும் உணர்ந்துஓதி அருள்தரு சுவாமிநாதப்பெருமான் அருள்பெறும்பொருட்டுச் சுவாமிமலைத் திருக்கோயிலில் 1994 ஆம் ஆண்டு கல்வெட்டாகப் பதிப்பித்ததுடன் திருமடத்தின் முன்னைவிழாவில் முதல்பதிப்பாக அச்சேற்றிவழங்கியும், இதன் இரண்டாம் பதிப்பாக 19 - 10 - 1999 விசயதசமித்திருநாளன்றுஅச்சேற்றி வழங்கியும் மகிழ்துள்ளார்கள்.

பெருமான் அருளை வாரிவழங்கும் இந்நூலினை இயற்றியவர் 18 ஆம் நூற்றாண்டில் **சுவாமிமலையில் வாழ்ந்து கடுக்கன் தியாகராச தேசிகர் என்று புகழப்பெற்றவரும், பின்னாளில் துறவியாகி  ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் என்ற பெயருடன் விளங்கியவர்ஆவார்**.

அன்பர்கள் இதனைப் பல்கால்ஓதிமகிழ்ந்து அருள்தரு சுவாமிநாதப் பெருமானின் பேரருளாம் திருவருள்பெற்றுச் சிறக்க அன்புடன் வேண்டுகிறேன்.

அன்புடன்
குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனப் புலவர்
வித்துவான். க. கதிரேசன். எம்; ஏ. பிஎட்
பூவாளூர். 621 712

உ

**திருஏரகம் ( சுவாமிமலை )**
**அருள்தரு சுவாமிநாதப்பெருமான் நவரத்தினமாலை**

*************************

பொன்அரங் காகஉறை மார்பன்ச கோதரி புரந்தரி துரந்தரிஉமை
பூமிபுகழ் வாமிஅபி ராமிசிவ காமிஅருள் புதல்வகுரு பரசாமிநின்
சந்நிதிஅ டைந்தவர்க்(கு) எந்நிதிய மும்உதவும் தயாநிதிகி ருபாநிதிபதி
சடாட்சர சுபகர கடாட்சம்அதுசெய்யஇது சமயம்நல்ல சமயம்ஜயா
உன்உருவம் உல(கு)உயிர்கள் யாவும்என் றால்எந்தன் உள்மெலிவை நீஅறியையோ
ஓம்நமோ சரவணோற் பவகுமரா முருகாஎன் உறுதிநிறை வேற்றிவைத்(து)ஆள்
மன்னும்உரு சொன்னமொழி கன்னல்எழில் மின்அரசி வள்ளிமண வாளசரணம்
வன்னமயில் வாகனா பொன்ஏர கப்பதியில் வளர்சாமி நாதகுருவே.

**குறிப்புரை** : அரங்கம்= சபை. மார்பன்= மார்புடைய திருமால். புரந்தரி= உலகை நிலைநிறுத்துபவள். துரந்தரி= வல்லமையுடையவள். உமை= உமாதேவி. வாமி= சிவனின் இடதுபாகத்தவள். அபிராமி= உயிர்களிடம் விருப்பம்கொண்டவள். குருபரசாமி= குருவாகிய மேலான இறைவன். தயாநிதி= இரக்கமாகிய செல்வமுடையவன். கிருபாநிதி= கருணைச் செல்வமுடையவன். ஓம்= ஓங்காரத்தின் உட்பொருளே. நமோ= வணக்கம். சடாட்சர= சரவணபவ என்ற ஆறெழுத்துக்குரியவன். சுபகர கடாட்சம்=மங்கலவாழ்வு அருளும் கடைக்கண்நோக்கு. உள்மெலிவு= மனத்துன்பம். அறியையோ= அறியவில்லையா ? - அறிவாய். மன்னும் உரு சொன்னமொழி= பெருமைபொருந்த நான் உருவேற்றிச் சொன்ன சொல். மன்னும் உரு சொன்னமொழி ஓம் நமோ சரவணபவ என்றுகூட்டுக. உறுதி= நன்மை. கன்னல் எழில் மின் அரசி= கரும்புபோன்று இனிமைதருகின்றவளும், அழகியும், தெய்வ ஒளி உடையவளும் தலைவியும். சரணம் = அடைக்கலம். வன்னம்= தங்கநிறம்= அழகு. பொன் ஏரகம்= பொலிவுசான்ற சுவாமிமலை. வளர்= உயர்ந்த. குருவே= குருவாகிய சிவபிரானுக்கும் குருவே.

**பொழிப்புரை** : தன்மார்பைத் திருமகளின் பொன்னாலான சபையாகக் கொண்ட திருமாலின் சகோதரியும், உலகை நிலைநிறுத்துவதால் புரந்தரி என்றும்; அனைத்து வல்லமையும் உடையவள் என்பதால் துரந்தரி என்றும்; உமையம்மை என்றும்; உலகு புகழுமாறு சிவபிரானின் இடப்பாகம் கொண்டதால் வாமி என்றும்; உயிர்க்குலத்தின் ஈடேற்றத்தில் விருப்பம் கொண்டவள் என்பதால் அபிராமி என்றும்; சிவபிரானையே விரும்புகிறவள் என்பதால் சிவகாமி என்றும் போற்றப்பெறுகிறவள் அருளிய மகனே ! குருவாகிய சிவபிரானுக்கும் உபதேசித்த மேலான இறைவனே உனது திருமுன் வந்தவர்க்கு

எவ்வகை உயர்வும் அருளும் இரக்கமாகிய செல்வனே ! கருணைச்செல்வனே ! அனைவர்க்கும் தலைவனே ! நீ எனக்கு என்றும் மங்கல வாழ்வுஅருளும் உன்கடைக்கண்நோக்கு அருளத்,தலைவனே இதுதக்க நேரம் ! உலகம் உயிர்கள் அனைத்தும் உன்உருவம் என்பதால் எனது மனத்துன்பத்தை நீ அறியமாட்டாயோ ? அறிவாய். " **ஓம் நமோ சரவணபவா** " என்ற பெருமைபொருந்திய மந்திரத்தை உருவேற்றிச் சொன்ன சொல்காரணமாக எனக்கு நன்மைகளை நிறைவேற்றித்தந்து என்னை அடிமை கொள்வாயாக. கற்கண்டு போல் இனிய சொற்களைப் பேசுகிறவளும், அழகியும், தெய்வஒளி வீசும் தலைவியும் ஆகிய வள்ளிநாச்சியார்க்குத் தலைவனே ! பொன்நிறத்து மயில்ஊர்தியனே ! பொலிவுசான்ற திருவேரகமாகிய சுவாமிமலையில் எழுந்தருளியுள்ளவனாய் யாவர்க்கும் உயர்ந்த குருவே ! உன்திருவடிகட்கு நான் அடைக்கலம். காத்தருள்க.

**இலக்கணக்குறிப்பு** : புரந்தரி, துரந்தரி வாமி, அபிராமி, சிவகாமி - வடமொழியில் அமைந்த காரணப்பெயர்கள். குருபர, சுவாமி, தயாநிதி, கிருபாநிதி, பதி, குமர, முருக - அண்மை விளிகள். அறியையோ - இரு எதிர்மறைகள் கொண்ட உடன்பாட்டுச்சொல்.

( 2 ) நின்பக்கல் அன்பிலாப் பாவியர் படுதுயரம் நின்அடியர் தாம்உறுவதும்
நினைஎன்றும் மறவாத புண்ணியர் பெரும்செல்வம் நிர்மூடர் தான்பெறுவதும்
அன்புடன் இல்லறம் செய்தரும சாலிகள் அல்லலால் மனம்நோவதும்
அறம்தனை மறந்திடும் அசத்தியப் பேயர்கள் அகம்மகிழ்ந் தேவாழ்வதும்
உன்மகிமை யோஅலது கலியுகப் பெருமையோ உனையன்றி அணுஅசையுமோ
உலகினில் கண்கண்ட மெய்யான தெய்வமே உயர்பரங் குன்றில்உறைவாய்
வன்பகைச் சூர்வேர்க ளைந்ததுபோல் என்பகையை மாற்றிடும் வடிவேல்வலா
வன்னமயில் வாகனா பொன்ஏர கப்பதியில் வளர்சாமி நாதகுருவே.

**குறிப்புரை** : பெரும்செல்வம்= பெரிய இன்பம். நிர்மூடர்= அறிவுஅழிந்தவர். அசத்தியப் பேயர்= பொய்பேசும் பேயொத்தவர். பரங்குன்றில் உறைவாய்= சிவபிரானுடன் கயிலையில் வாழ்கிறவனே. சூர்வேர் களைந்தது= கொடிய அசுரரை வேருடன் அகழ்ந்தெடுத்தது. பகையை மாற்றிடும்= பகையை அழிக்கும். வடிவேல்வலா= கூர்மையான வேல் ஓச்சுவதில் வல்லவனே !

**பொழிப்புரை** : உன்மேல் அன்பில்லாத பாவிகள் படவேண்டிய துயரத்தை உன்மேல் அன்புடைய அடியவர் அனுபவிப்பதும், உன்னை எந்நாளும் மறவாத புண்ணியர் பெறவேண்டிய பேரின்பத்தை அறிவு அழிந்தவர் பெற்று அனுபவிப்பதும், மிக்க அன்புடையராய் இல்லறத்தில் வாழும் அறநெறிமிக்கவர் துன்பத்தால் மனம்வருந்துவதும், அறநெறி மறந்து வாழும் பொய்பேசும் பேய்ஒத்தவர்கள் மனம் மகிழ்ச்சியுடன் வாழ்வதும், உன்அருளால்தானா ? அல்லது கலியுகத்தின் பெருமை காரணமாகவா ? எனினும் உன்அருள் இல்லாமல் எந்தஒரு அணுவும் இயங்காது. உலகில் கண்கண்ட மெய்யானதெய்வமே ! மேலான சிவபிரானுடன் கயிலையில் வாழ்கிறவனே ! பொன்னிறத்து மயில் ஊர்தியனே ! பொலிவு சான்ற திருவேரகமாகிய சுவாமிமலையில் எழுந்தருளியுள்ளவனாய் யாவர்க்கும் உயர்ந்த குருவே ! கூர்மையான வேலோச்சுவதில் வல்லவனே ! கொடிய பகைவராகிய அசுரர்களை வேருடன் அகழ்ந்தெறிததுபோல் என்பகைகளையும் அழித்தருள்க.

( 3 ) ஒருதரம் சரவண பவாஎன்று சொல்பவர் உளத்தினில் நினைத்தஎல்லாம்
உடனேகை கூடும்என வேதங்கள் மொழியுதே உண்மைஅறி வானபொருளே
பரிவாக வேஅநந் தந்தரம் சரவண பவாஎன்று நான்சொல்லியும்
பாங்குமிகு காங்கேயா அடியனேன் எண்ணியது பலியா(து) இருப்ப(து)ஏனோ
குருபரா முருகையா கந்தாக டம்பாசொல் குமராகு காசண்முகா
கோலாக லாவெற்றி வேலாஎ னக்(கு)அருள் கொடுத்(து)ஆள்வை முத்தையனே
மருமலர்க் குழல்அளக தேவகுஞ் சரிவள்ளி மணவனே என்துணைவனே
வன்னமயில் வாகனா பொன்ஏர கப்பதியில் வளர்சாமி நாதகுருவே.

**குறிப்புரை** : உண்மை அறிவான பொருளே= சத்தும் சித்தும் ஆன இன்பப்பொருளே. பரிவாக= அன்புடன். அநந்தம்= அளவில்லாத. பாங்குமிகு= அழகுமிக்க. குருபரா= மேலான குருவே.சொல்= புகழ். கோலாகலா= என்றும் மகிழ்வானவன். மருமலர்= மணக்கும்மலர். குழல் அளகம்= சுருட்டி முடித்த கூந்தல். தேவகுஞ்சரி= தெய்வயானையம்மை. மணவன்= கணவன்.

**பொழிப்புரை** : சத்தும் சித்தும் ஆன இன்பப்பொருளே ! ஒருமுறை சரவணபவா என்று சொல்கிறவர் மனத்தில் நினைத்த அனைத்தும் உடனே கைகூடும் என்று வேதங்கள் கூறுகின்றனவே ! அழகுமிக்க காங்கேயனே ! நான் அளவற்றமுறை சரவணபவா என்று சொல்லியும் என்எண்ணம் நிறைவேறாதது ஏன் ? மேலான குருவே ! முருகையனே ! கந்தனே ! கடம்பமலர் சூடியவனே ! புகழ்ந்து கூறப்பெறும் குமரனே ! குகனே ! ஆறுமுகனே ! என்றும் மகிழ்வானவனே ! வெற்றி வேலா ! மணக்கும் மலர்சூடிச் சுருட்டிமுடித்த கூந்தலுடைய தெய்வயானையம்மை, வள்ளி நாச்சியார் ஆகியவர்க்குக் கணவனே ! என் துணைவனே ! பொன்னிறத்து மயில் ஊர்தியனே ! பொலிவுசான்ற திருவேரகமாகிய சுவாமிமலையில் எழுந்தருளி உள்ளவனாய் யாவர்க்கும் உயர்ந்த குருவே ! முத்தையனே எனக்கு உனது அருள்வழங்கி ஆண்டருள்க.

( 4 ) கந்தாகு ழந்தைவடி வேலாகு காசண்மு காபரம குருதேசிகா
கனம்பெற உனக்கேஜெ யம்தருவம் நீஉன்க ருத்தினில் பயப்படேல்என்(று)

எந்தாய வேளையிலும் அசரீரி மொழியாலும் எண்ணில்ச குனங்களாலும்
இயம்பும்உன் உத்தரவு பொய்க்குமோ உனைநம்பி என்மனம்ம யங்கலாமோ
சிந்தாகு லம்தவிர்த்(து) இந்தாள னக்கருணை செய்(து)என்அ பீஷ்டம்யாவும்
சித்திக்க வேஅருள்செய் பத்தர்க்(கு)இ ரங்கும்என் தெய்வமே உனைநம்பினேன்
மந்தாகி னிக்(கு)இனிய மைந்தா முகுந்தற்கு மருகாசி றந்தமுருகா
வன்னமயில் வாகனா பொன்ஏர கப்பதியில் வளர்சாமி நாதகுருவே.

**குறிப்புரை :** கனம்பெற= நிறைவாக. எந்தாய வேளை= எந்நேரமும். சிந்தாகுலம்= மனத்துன்பம். அபீஷ்டம்= விருப்பம். சித்திக்க= கைகூட - நிறைவேற. மந்தாகினி= கங்கை. முகுந்தன்= திருமால்.

**பொழிப்புரை :** கந்தனே ! கூரிய வேலேந்திய குழந்தையே ! குகனே ! ஆறுமுகனே ! மேலான குருவாகிய அழகனே ! " நிறைவாக உனக்கு வெற்றி தருவோம். உன்மனத்தில் அஞ்சவேண்டா " என்று எந்நேரமும் அசரீரிச் சொல்லாலும், எண்ணற்ற சகுனங்களாலும் எனக்கு அருளும் உன்உத்தரவு பொய்யாகுமோ ? உனைநம்பி என்மனம் மயங்கலாகாது. உன்அடியார்க்கு மனம்இரங்கும் என்தெய்வமே ! கங்கைக்கு இனிய மகனே ! திருமால் மருகனே ! அருள்வதில் சிறந்த முருகா ! பொன்னிறத்து மயில்ஊர்தியனே ! பொலிவுசான்ற திருவேரகமாகிய சுவாமிமலையில் எழுந்தருளியவனாய், யாவர்க்கும் உயர்ந்த முருகா ! என்மனத்துன்பம் நீக்கி " இந்தா என்கருணை " என்று அருளி, என்விருப்பங்கள் யாவும் கைகூட அருள்வாயாக.

( 5 ) நெஞ்சினில் கவலையும் சஞ்சலகி லேசமும் நீஎன்ன அறியாததோ
நீரினில் தண்மைபோல் உயிரினுக்(கு) உயிராகி நிறைகின்ற பரிபூரணா
தஞ்சம்பு குந்தவன் கொத்தடிமை என்(று)எனைத் தான்காக்க வேணும்அல்லால்
தள்ளிவிடல் நீதியோ சமயம்இது அல்லவோ சரணம்பு குந்தபின்னர்
அஞ்சல்என ஆதரவு செய்வதுபோல் செய்(து)ஒன்ன லாரிடம் விடுக்கலாமோ
ஐயனே உனதுதிரு விளையாடலோ உன்அடைக்கலம் அடைக்கலம்காண்
மஞ்(சு)ஓதி அத்தேவ குஞ்சரிம னோகரா வள்ளிநா யகத்தெய்வமே
வன்னமயில் வாகனா பொன்ஏர கப்பதியில் வளர்சாமி நாதகுருவே.

**குறிப்புரை** : சஞ்சலம் கிலேசம்= கவலையும் அச்சமும். பரிபூரணா= குறைவிலா நிறைவாய் உள்ளவனே. கொத்தடிமை= வழிவழி அடிமை. தான்= நீ. ஒன்னலார்= பகைவர். மஞ்சு ஓதி= கார்மேகம் போன்ற கூந்தல். மனோகரா= விருப்பமானவனே. நாயகத்தெய்வம்= கணவனாகிய தெய்வம்.

**பொழிப்புரை :** எனது மனத்தில் உள்ள கவலையும் அச்சமும் ஆகியன நீ அறியாதனவல்ல. நீரில் குளிர்ச்சிபோல் அனைத்து உயிர்களுக்கும் உயிராகவிளங்கி அவற்றில் நிறைந்து விளங்கும் குறைவிலா நிறைவே ! உன்னிடம் அடைக்கலம்புகுந்த என்னை இவன் வழிவழிஅடிமை என்று நீகாக்க வேண்டும். அங்ஙனம் காவாது ஒதுக்கல் நீதியன்று; இது உரிய நேரமுமன்று. காத்தருளவேண்டிய நேரம் இது. அடக்கலம் புகுந்தபின் அடைக்கலம்புகுந்தவரைக் காப்பதுபோல் பாவனைசெய்து, பகைவரிடம் விடலாமா ? தலைவனே ! இதுதான் உன் திருவிளையாடலா ? கார்மேகம்ஒத்த கூந்தலுடைய தெய்வயானையம்மைக்கு விருப்பமானவனே ! வள்ளிநாயகிக்குக் கணவனே ! பொன்நிறத்து மயில் ஊர்தியனே ! பொலிவுசான்ற திருவேரகமாகிய சுவாமிமலையில் எழுந்தருளியவனாய், யாவர்க்கும் உயர்ந்த முருகா ! உன்திருவடிகட்கு அடைக்கலம் ; அடைக்கலம். .

**விளக்கம்** : " நீரின் தண்மையும் தீயின் வெம்மையும் " ( குறுந்தொகை ) நீரின் இயல்பு தண்மை. அது நீரெங்கும் இடைவெளியின்றிப் பரவிஇருப்பது. அதுபோல் முருகன் உயிர்களில் எல்லாம் அதன்எவ்விடத்தும் பரவியுள்ளான் என்றார்.

**இலக்கணக்குறிப்பு :** விடுக்கலாமோ - ஓகாரம் எதிர்மறைப்பொருளது.அடைக்கலம் அடைக்கலம் - அடுக்குத்தொடர். காண் - அசைநிலை. இச்செய்யுள் உவமையணி.

( 6 ) ஆறுதலை யர்அருள்செய் ஆறுதலை யாய்எனக்(கு) ஆறுதலை யார்உனையல்லால்
ஐயனே ஈறாறு கையனே மெய்யனே அனைத்தினும் நீஒருவனே
தேறுபொருள் எனவேத வேதாந்தம் அதனிலும் தீர்க்கமகா வாக்கியம்எலாம்
திவ்யதேஜோ மயாநந்த பரிபூரணத் தேவசிவ குருவேஉனை
வீறுஉள்ள தேஎன்று கூறுவ(து)அ லால்எங்கும் வேறும்ஒரு தெய்வம்உளதோ
விண்ணவர் சிறைமீள ஆயிரம் கண்ணுளான் மேல்உலகு தனைஆள
மாறிட்ட சூரனைக் கூ(று)இட்ட வேலால் மனத்(து)இருள்ஒ ழித்(து)அருளுவாய்
வன்னமயில் வாகனா பொன்ஏர கப்பதியில் வளர்சாமி நாதகுருவே.

**குறிப்புரை :** ஆறுதலையர்= கங்கையைத் தலையில்சூடிய சிவபிரான். அருள்செய்= அருளத்தோன்றிய. ஆறுதலையாய்= ஆறுமுகப்பெருமானே. உன்னையல்லால் எனக்கு ஆறுதலை யார். ஆறுதலை யார்= ஆறுதல் தருகிறவர் யாருமில்லை. மெய்யனே= ஞானவடிவன். தேறுபொருள்= நிச்சயிக்கப்பெற்ற பொருள். வேதாந்தம்= உபநிடதம். தீர்க்க மகா வாக்கியமெலாம்= முடிந்த முடிவான கருத்துகள் அனைத்தும். திவ்ய தேஜோமய ஆநந்த பரிபூரணத் தேவ சிவகுருவே= ஒளிமயமான முழுமையான பேரின்ப வடிவான தெய்வமாகிய சிவனுக்கும் குருவே. வீறு உள்ள தே= உயர்வு பொருந்திய தெய்வம். ஆயிரம் கண்உளான்= தேவேந்திரன். மாரிட்ட= பகைத்த.

**பொழிப்புரை** : கங்கையைத் தலையில் சூடிய சிவபிரான் அருளத்தோன்றிய ஆறுமுகப் பரமனே ! உன்னைத்தவிர எனக்கு ஆறுதல் தருவார் யாருமில்லை. தலைவனே ! பன்னிரு கைகளுடையவனே ! ஞாவ வடிவனே ! அனைத்துவகையிலும் நீ ஒருவன்தான் நிச்சயிக்கப்பெற்ற - நிலையான - பொருள் என்று வேதம், உபநிடதம் ஆகியவற்றின் முடிந்த முடிவான கருத்துகள் அனைத்தும், உன்னையே ஒளிமயமான, முழுமையான, பேரின்பவடிவான தெய்வமென்று கூறும். சிவகுருவே ! உன்னையே உயர்வுபொருந்திய தெய்வம் என்று எங்கும் அவை கூறுவதால், உன்னைத்தவிர வேறுஒரு தெய்வம் இல்லை. பொன்னிறத்து மயில் ஊர்தியனே ! பொலிவுசான்ற திருவேரகம்ஆகிய சுவாமிமலையில் எழுந்தருளியவனாய் யாவர்க்கும் உயர்ந்த குருவே ! சூரனுடைய சிறையில் இருந்து தேவர்கள் வெளிவரவும், தேவேந்திரன் தேவருலகை ஆளவும், பகைத்த சூரனை இருகூறுகள் ஆக்கிய உனது வேலால் என்மனத்து இருள் ஒழித்து அருள்வாயாக.

( 7 ) உண்டுஎன் இடத்தினில் பலகுற்றம் ஆகிலும் உனைஅடைந் தேன்ஆதலால்
உவந்தேபொ றுத்திடுதல் உன்கடமை அல்லவோ உண்மையாய் ஒருவிண்ணப்பம்
பண்(டு)உதிரம் அதுசிதற வில்லால்அ டித்திட்ட பார்த்தனைக் கோபியாமல்
பாசுபதம் அருள்செய்த சிவகும ராநின் பயந்தவர்செய் பாங்குபோலும்
திண்டுமுண்(டு) உரைசெய்த நக்கீர னைக்காத்த செய்கைபோல் உன்கிருபையால்
சிறியன்மீ தேபூர்ண கருணாக டாட்சம்அது செயவேணும் இதுசமயமே
வண்டுகுடி கொண்டகுழல் கெண்டைவிழி கண்டுமொழி வள்ளிமண வாளசரணம்
வன்னமயில் வாகனா பொன்ஏர கப்பதியில் வளர்சாமி நாதகுருவே.

**குறிப்புரை** : உதிரம்= இரத்தம். சிவகுமரா= சிவபிரானுக்கு மகனே. பயந்தவர்= பெற்றவர் - பெற்றோர். திண்டு முண்டு உரைசெய்த= எதிர்த்துப்பேசிய.

**பொழிப்புரை** : சூடிய மலரில்மொய்க்கும் வண்டுகள் வாழும் கூந்தலும், கெண்டைமீன் ஒத்த விழிகளும், கற்கண்டு போன்ற சொற்களுமுடைய வள்ளிநாயகிக்குக் கணவனே ! பொன்னிறத்து மயிலூர்தியனே ! பொலிவு சான்ற திருவேரகம் ஆகிய சுவாமிமலையில் எழுந்தருளியுள்ளவனாய் யாவர்க்கும் உயர்ந்த குருவே ! உன்திருவடிகட்கு நான் அடைக்கலம். என்னிடத்தில் பல குற்றங்கள் இருப்பினும் நான் உன்னைச் சரணடைந்தேன் ஆதலால் மகிழ்வுடன் என்குற்றங்களைப் பொறுத்துக் கொள்ள வேண்டும். அது உன்கடமையாகும். ஏனெனில், முன்னாளில் உன்தந்தையாகிய சிவபிரானை விசயன் தன்வில்லால் தலையில்அடித்ததால் தலையில் குருதிசிதறியபோதும் அவனைச் சினவாமல் பாசுபதம் என்ற அம்பினை அவனுக்குக்கொடுத்த சிவபிரானின் கருணையைப் போல் நீ தருமியின் பொருட்டு உன்னை எதிர்த்துப்பேசிய நக்கீரனைச் சினவாது சிறையிலிருந்து விடுவித்தாய். அதுபோல் உன்அருளால் கீழான என்மேல் கருணைகண்நோக்கு அருளவேண்டும். அதற்கு இதுவே தக்கசமயம். அருள்புரிவாயாக.

**விளக்கம்** : மாபாரதப்போரில் வெல்லும்பொருட்டு அருச்சுனன் சிவபிரானிடம் பாசுபதம் என்ற அம்பு பெற இமயமலைக்கண் தவம்செய்தான். பாசுபதஅம்பினைக் கையாளும் திறன் அவனுக்கு உள்ளதா என்பதைச் சோதிக்க வேடனாய் வந்த சிவபிரான், எதிரே கண்ட காட்டுப்பன்றியை நோக்கி அம்பெய்ய, அதேநொடியில் தவம்செய்துகொண்டிருந்த அருச்சுனனும் அம்பெய்யப் பன்றி வீழ்ந்தது. பன்றியை வீழ்த்தியது யார் என்ற விவாதம் போராக மூள, மற்போருக்குக்குப்பின் நிகழ்ந்த வில்போரில் அருச்சுனன், வில்லால் சிவபிரானின் தலையில் அடித்ததால் குருதி தெறித்தது. எனினும் அருச்சுனனது ஆற்றலுக்கு மகிழ்ந்த சிவபிரான் அவனுக்குப் பாசுபத அம்பு ஈந்தான் என்பது வில்லிபாரதம் " அருச்சுனன் தவநிலைச் சருக்கம் கூறும் செய்தியாகும்.

( 8 ) கொஞ்சநெஞ் சம்பயம் இன்றிஅறம் அதனைச் சிதைத்திடல் சிவத்துரோகம்
குருநிந்தை யொடுசகோ தரத்துரோ கம்அனம் கொடுத்தவர்க் குத்துரோகம்
வஞ்சகம் பொய்சூ(து) அசத்தியம் ஈரிச்சை மாச்சரியம் மிக்கநன்றி
மறத்தல்பு றங்கூறல் இன்னம்இப் படிவெகு மாபாவம் செய்தகொடிய
பஞ்சமா பாவிகள் எண்ணமோ முடியும்இப் பார்மீதில் உனைநம்பிவாழ்
பக்தர்கள் நினைப்(பு)ஒன்றும் முற்றா(து) இருக்குமோ பரமகுரு நாதசாமி
வஞ்சகச் சூரர்எனும் மாசினைஅ கற்றியே வானுலகு வாழவைத்தோய்
வன்னமயில் வாகனா பொன்ஏர கப்பதியில் வளர்சாமி நாதகுருவே .

**குறிப்புரை** : அனம்= உணவு. அசத்தியம்= வேஷம் போடுதல்,. ஈர் இச்சை= பிளப்பில் - புணர்ச்சியில் - மிகுவிருப்பம். மாச்சரியம்= பொறாமை. எண்ணமோ முடியுமோ= நினைவு நிறைவேறாது. முற்றாது இருக்குமோ= நிறைவு பெறும். சூரர்= அசுரர். வானுலகு= தேவர்கள்.

**பொழிப்புரை** : பொன்னிறத்து மயிலூர்தியனே ! பொலிவுசான்ற திருவேரகம் ஆகிய சுவாமிமலையில் எழுந்தருளியவனாய் யாவர்க்கும் உயர்ந்த குருவே ! மேலான குருநாதனாகிய சாமியே ! வஞ்சகராகிய அசுரர்களின் சிறையில் அடைபட்ட குற்றத்தைப் போக்கி, தேவர்களை அவருலகில் வாழவைத்தவனே ! இவ்வுலகில், மனத்தில் சிறிதளவும் அச்சமின்றி அறச்செயலை அழித்தல், சிவத்துரோகம் செய்தல், குருவைப் பழித்தல், உடன்பிறந்தவர்க்குத் துரோகம் செய்தல், உணவு இட்டவர்க்குத் துரோகம் செய்தல், வஞ்சித்தல், வேஷம்போடுதல், சூதாடல், பொய்கூறல் இன்னும் இத்தகைய கொடிய ஐம்பெரும்பாவிகள் நினைவு நிறைவேறாது. உன்னைநம்பி வாழும்பக்தர்களின் நினைப்பே நிறைவேறும்.

**இலக்கணக்குறிப்பு :** எண்ணமோ முடியும் - ஒகாரம் எதிர்மறையில் வந்தது. முற்றாது இருக்குமோ - இருஎதிர்மறைகள் இணைந்து உடன்பாட்டுப்பொருள் தந்தன. வானுலகு - இடவாகுபெயர்.

( 9 ) மைந்தர்மேல் மோடியது தாய்தந்தை செய்வ(து)என் மாயமோ இதுநியாயமோ
பாலசுப் பிரமணியன் என்றபேர் நிசம்என வகுத்த(து)உன் வேடிக்கையோ
எந்தன்உடல் உயிர்பொருள் யாவுமே நீஎன இருப்போர்க்கும் இரங்காவிடில்
என்னையும் நகைத்(து)ஐய உன்னையும் நகைப்பதற்(கு) இடன்அல்லவோ கருணையாய்ச்
சுந்தரம்மி குந்(து)இலகு சண்முகமும் ஈராறு தோளும்க டம்புமெங்கள்
தோகைதெய் வானைகுற மங்கையொடு தோகைமேல் தொண்டனேன் கண்டுமகிழ
வந்(து)எழுந் தருளிஎனை ஆண்டுகொள் வாய்உன் மலர்ப்பதம் சரணம்ஐயா
வன்னமயில் வாகனா பொன்ஏர கப்பதியில் வளர்சாமி நாதகுருவே.

**குறிப்புரை :** மோடி= வஞ்சனை. மாயமோ= அழகோ. நகைத்து= ஏளனம் செய்து. தோகைதெய்வானை= மயில்போன்ற தெய்வயானையம்மை. தோகை= மயில். சரணம்= அடைக்கலம்.

**பொழிப்புரை :** தமது குழந்தைகளிடம் தாய் தந்தை வஞ்சனை செய்வது அழகல்ல; அவ்வாறு செய்வது நியாயமுமில்லை. உனக்குப் பாலசுப்பிரமணியன் என்று பெயர் வைத்தது உண்மையில் வேடிக்கைதானா ? எனது உடல் உயிர் பொருள் அனைத்தும் நீயேஆவாய் என்று இருப்பவர்க்கும் நீ இரக்கம்காட்டாவிட்டால், உன்செயல் எனக்கும் உனக்கும் ஏளனமே தரும். பொன்னிறத்து மயிலூர்தியனே ! பொலிவுசான்ற திருவேரகம் ஆகிய சுவாமிமலையில் எழுந்தருளியவனாய் யாவர்க்கும் உயர்ந்த குருவே ! மேலான குருநாதனாகிய சாமியே ! கருணைகூர்ந்து அழகுமிக்கு விளங்கும் உனது ஆறுமுகங்களும், பன்னிருதோள்களும், தோள்களில் கடம்பமலர்மாலை அணிந்து எமது மயில்ஒத்த தெய்வயானையம்மை, வள்ளிநாச்சியார் ஆகியவருடன் மயிலின்மேல் உன்னைத் தொண்டனாகிய நான் கண்டுமகிழவந்து தோன்றி என்னை அடிமைகொள்வாயாக. ஐயா ! உனது தாமரைத்திருவடிகட்கு நான் அடைக்கலம்.

**இலக்கணக்குறிப்பு :** மாயமோ, நியாயமோ - எதிர்மறை ஓகாரங்கள்.

திருச்சிற்றம்பலம்